# சீவாஜி

1957 ஜூன் 16

விலை 7 நயா பைசா

## இந்தியத் துறைமுகத்தில் கப்பல் கட்டுகிறார்கள்.



படம் 1. விசாகப்பட்டணம் துறைமுகத்தில் கப்பல் கட்டுவதற்காக அளவுகள் காட்டப்பட்டிருக்கும் காட்சியில் ஒன்று.

படம் 2. சமீபத்தில் கந்தலா துறைமுகத்தில் புதிய கப்பல் செய்து மிதக்க விடப்பட்டிருக்கும் காட்சியில் ஒன்று.

படம் 3. மலபாரில் கிராமப் படகுகள் தண்ணீரில் போட்டி போட்டுக் கொண்டு செல்லும் காட்சியில் ஒன்று.

படம் 4. "டப்பரின்" என்ற கப்பலில், கப்பல் அதிகாரி, கப்பலின் விஷயங்களைப்பற்றிச் சொல்ல அதை மிக்க கவனத்துடன் கேட்டுக்கொண்டிருக்கும், இளம் பயிற்சியாளர்களின் காட்சியில் ஒன்று.

சென்ற இதழ் தொடர்ச்சி

# மாறாத அன்பு.

(ராதிகா.)

"தாரா...உனக்குத் தனித் தோட்டம் வேண்டுமா? இந்த தோட்டத்தை பூரண உரிமையுடன் உனதாக நீ பாவித்துக் கொள்ளலாம்'' உனக்கில்லாமலா....மேலே ஏனோ பேசாது நிறுத்தினான்.

''சந்தோஷம்'' பதிலில் நன்றி தொனித்தது. பை நிறைய புஷ்பங்களுடன் வீடு திரும்பினாள் தாரா.

மறுதினம் அவள் மாமா வீட்டிற்கு வருகையில் தனக்காக ராஜா ரோஜாப்பதியங் கொண்டுவந்து வைத்திருப்பது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்டாள் அவள்.

"இதற்கு உரம் வேண்டுமே''! என்றாள் தாரா. "அதெல்லாம் உன் பொறுப்பு.'' ஆண் கொண்டு வந்ததைப் பாதுகாப்பது பெண்ணின் கடமையில்லையா?'' இது ராஜாவின் பதில்.

''உம் சரி....நான் பார்த்துக் கொள்கிறேன். அதற்குஎன்ன எனக்குத் தருவீர்கள்?'' என்று இதற்கிடையில் குறுநகை தவழக்கேட்டாளவள்.

''எது கேட்டாலும் தருவேன்!'' என்று கூறிய அவன் அவள் முகத்தைப் பார்த்தபடியே ''இதில் பூக்கும் பூ அனைத்துமே தருகிறேன்'' என்றான்.

''எல்லாப்பூவும் வேண்டாம். முதல் பூ கொடுத்தால் போதும்',

'' ஓ.... எஸ் .... உனக்கில்லாமல் யாருக்கு?''....

மேலே பேச்சு வளர்வதற்குள் தாயார் வந்துவிடவே அன்று மேலே பேச முடியவில்லை,

நாட்கள் உருண்டன. வேலை விஷயமாக ஒரு வாரம் வெளியூர் செல்ல நேரிட்டது குறித்து ராஜாவிற்கு எல்லையற்ற வருத்தம். 'ஆம். அவன் வைத்த ரோஜாசெடிக்கு உரம் போட்டு வளர்த்த தாரா ரோஜா செடியில் துளிர்விட வைத்ததுபோல் ராஜனின் மனதிலும் ப்ரேமையை துளிர்க்க வைத்துவிட்டாள். ராஜாவின் தாய் கௌரிக்கும் தாராவை தன் மருமகளாக்கிக்கொள்ளவே விருப்பம். ஆனால்விதி வேறுவிதமாய் விளையாட ஆரம்பித்தது.

ராஜா வெளியூர் போய் வந்த அன்று முகவாட்டத்துடன் உள் நுழைந்தாள் தாரா. மாலா வீட்டில் இல்லை. கௌரியம்மாளிடம் பேசிவிட்டு வந்த அவள் வாசல் அறையில் நின்றிருந்த ராஜனை கலக்கத்துடன் பார்த்தபடி ''எங்கப்பாவிற்கு மாற்றல் வந்துவிட்டது. நான் போய் வருகிறேன். என்னை நீங்கள் மறந்துவிடமாட்டீர்களே!'' என்று கூறுமுன் அவள் கண்களில் நீர் நிறைந்துவிட்டது.

''வேறு ஊருக்குப் போகிறாயா?'' என்றதைத் தவிர ராஜனால் ஒன்றும் கூறமுடியாது தொண்டையை ஏதோ அடைத்தது;

"ஆம்;....என்னை மறந்துவிடுவீர்களா?''

"நான் மறக்கமாட்டேன். நீ மறந்து விடுவாயா?'' என்ற சொல் அவனை அறியாமலே வெளிவந்தது.

அவனை ஏறிட்டுப் பார்த்த அவள் உங்களை மறப்பதா? நானா?'; என்று துக்கத்தால் வாயைத் துணியால் மூடிக்கொண்டு மேலே பேசமுடியாது விர்ரென்று வெளியே போய்விட்டாள்.

பிரிவு என்பது மிக பயங்கரமானது. அவன் அன்று விடைபெற்ற துயர நினைவே அடிக்கடி வந்து ராஜனின் மனத்தை பாதித்தது. அவளைத் தவிர வேறு மங்கையை மனதாலும் நினைப்பதில்லை என உறுதிகொண்டிருந்த ராஜனுக்கு கடிகாரம் கடமையை உணர்த்த பதினொன்று அடித்தது. சுய நினைவுபெற்ற அவன் அன்றைய வேலையில் சிந்தனையை பரவவிட்டான்.

அன்று ஆறுபேரை டைபிஸ்டுக்காக பேட்டி காணவர ஆர்டர் அனுப்பியிருந்தான்.

இன்டர்வ்யூ ஆரம்பமாகியது. மனுவைப் பார்த்தபடி ''தங்கள் பெயர்?'' என்றான் தலைநிமிராமலே.

"தாராதேவி!'' குரலில் ஏனோ நடுக்கம் இருந்தது. தலைநிமிர்ந்தான் ராஜா. "தாராவா?'' என்றான் ஆச்சர்யமாக; அவளும் அவனை தயக்கத்துடனும் வியப்புடனும் பார்த்தாளேயன்றி பதில் ஏதும் கூறவில்லை.

''உங்கள் தந்தை பெயர் சிவராமனா!'' படபடப்பால் வினவினான் ராஜா.

''ஆம்! என்னை நினைவு வைத்திருக்கிறீர்களா? ராஜா........ என்ற அவள் குரலில் ஆவல் இருந்தும் பேச்சு நிதானமாய் வந்தது. "ஆ; தாரா! வந்துவிட்டாயா? ........ இத்தனை நாளாய் எங்கு இருந்தாய்? எல்லாரும் சௌக்யமா? உன்னை நினைக்காத நாளே இல்லை உனக்கு மணம்... என்று மேலே பேசாமல் அவள் கழுத்தைப் பார்க்கலானான் ராஜா.

''எனக்கா மணம்''...என்று, வறண்ட சிரிப்புடன் மேலே தொடர்ந்தாள். தற்சமயம் யாருமற்ற அனாதையாகிவிட்டேன். என்னைக் காத்துக் கொள்ள வேலையில் சேர ஒரு வருடமாய் படாதபாடு பட்டும் இன்றுதான் இண்டர்வ்யூக்கு இந்த வேலைக்காக ஆர்டர் கிடைத்தது....கண்ணீர் மளமளவென வழிந்தது.

''திடுக்கிட்ட ராஜன்! இனி நீ அனாதையல்ல தாரா?'' என்று அவளை அன்புடன் பார்த்தான்.

''உம்....சந்தோஷம்... உங்களுக்கு கல்யாணம் ஆகிவிட்டதா? அம்மா, மாலா எல்லாரும் சௌக்யமா?''

''தாரா! மாலா கணவனுடன் பம்பாய் சென்றுவிட்டாள். அம்மா சௌக்யம், இன்னும் என்ன சொல்லவேண்டும்?'' என்றுகுறும்பாகசிரித்தான்.

''உங்களுக்கு குழந்தை எத்தனை?'' என்று படபடப்பும் கவலையும் பொங்கி எழுந்தது தாராவின் கேள்வி,

''எனக்கா! தாரா!....என்னை இதயமற்றவன் என்று எண்ணிவிட்டாயா? மனைவியாக வரப்போகிறவள் கண்ணில் நேற்றுவரைப்படாமல் இருக்கையில் மணம் எப்படி ஆகும்? ராஜாவை ஆசை தவழ விழுங்கி விடுவதுபோல் பார்த்தாள் தாரா.

''தாரா! தூய உள்ளங்கள் ஒருதரம் கலந்தபின் ஒருபோதும் வெவ்வேறாவதில்லை, ஊனையும் உணர்வையும் உயிரையும் தாண்டி அப்பால் தொடரும் அந்த தெய்வீக அன்புக்கு எவ்வகையிலும் அழிவு வரமுடியாது என்பதை உணர்ந்ததில்லையா?'' என்றான் அவன்.

அவனிடம் விடை பெறுகையில் "மனநிறைவுடன், வேலை கிடைத்ததுமன்றி ராஜனையும் பார்த்துவிட்டோம்'' என்ற ஆனந்தத்துடன் வீடு செல்வதாகக் கூறி வீடு சென்றாள் தாரா.

மறுதினம் தாராவை ஆபீஸில் கண்டதும் ஒரு ரோஜாவை ராஜன் "உனக்காக முதல்பூ இதோ கொண்டு வந்து விட்டேன். நீ அனுமதி தந்தால் நானே உன் தலையில் சூட்டுகிறேன். ஆனால் உன்

(12ம் பக்கம் பார்க்க)

# பாரதியக் கவிதைகள்!

(வா. கோ. பா.)

**தெ**லுங்கு மொழியில் அபிமானம் மிகுந்தவர்கள் "தெலுகுதேட" என்று பெருமையாகச் சொல்லுவதுண்டு. தெலுங்கு மொழியிலும் இனிமை உண்டென்பதை நாம் மறுக்க முடியாது. அதுவும் பாட்டு விஷயத்தில்.

"ஸாகுமா ஓ நீல மேகமா
ககன வீணா - மிருதுள
ராகமா!
பீடபாரின சேல பீயூஷமுலு
ரால
கரிகலேனி போலால மர
கதம்முலு தேல
ஸாகுமா ஓ நீல மேகமா"

என்பதை யாராவது-தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் - பாடினால் அதன் ஓசையின்பம் நம் செவிக்குள் பெய்யத்தான் பெறும்.

பறந்து செல்வாயே முகிலே!
பரந்த வானிலே!
விரிந்த வானின் வீணை
நாதம்
விண்ணமுதம் பொழிந்
திட
வயல் வெடிப்பி லமுதம்
வார்த்து
வளம் பெருக்கி வாழ்
விப்பாய்
வயலெலாம் மரகதத்தின்
பசுமை வளர்க்க வரு
வாயே!

என்று கோடை காலத்தில் தாபத்தால் தவிக்கும் நிலமகளின் சார்பாகக் கவிஞர் ஸி. நாராயண ரெட்டி வரவேற்கின்றார்.

வடமொழியில் ஹாஸ்யக் கவிதைகளுக்குப் பஞ்சமில்லை.

நகைச்சுவை என்பது எந்த வகையிலும் யார் மனதையும் புண் படுத்தாமலிருக்கவேண்டும். அது சிரிக்கவைப்பதோடு நின்று விடாமல் சிந்திக்க வைக்கவும் வேண்டும். ஒரு மாதிரி பார்க்கலாம்.

"மாடு, மரம்" என்றெல்லாம் யாரையாவது திட்ட முற்படும் போது இழிவாகச் சொல்கிறோம். ஆனால் "மாடு" எனும் கால் நடைக்கு அடித்த யோகத்தை என்னவென்பது! சிவ பெருமானின் வாகனம் ஒரு காளை மாடு. அதைச் சிவ பெருமானின் சின்னமாகக் கருதிக் கண்டஇடமெல்லாம் கை கூப்பி வணங்காத தேவர்களே இல்லை. அதே மாட்டின் இனத்தைச் சேர்ந்த மற்ற மாடுகள் இங்கே பாரவண்டி இழுக்கவும் ஏற்றுமதிச் சரக்கான தோலுக்கு வகை செய்யும் கச்சாப் பொருளாகவும் உபயோகப்பட்டுவருகின்றன!

பறவைகளைச் சுட்டுத்தள்ளுகிறோம் — அழகாயிருந்தால் பிடித்துக்கூண்டுகளில் அடைக்கிறோம். எந்தக் குருவியையும் நாம் வணங்கி வழிபடுவதில்லை ஆனால் ஒரே ஒரு குருவிக்கு அந்த மதிப்புக் கிடைத்திருக்கிறது! அகிலமுண்ட பெருவாயன் என்றும் அகிலாண்ட நாயகனென்றும் உலக ஆட்சித் தலைமைப் பீடத்தில் நிரந்தரமாக இருந்துவரும் நாரணனைச் சுமந்து செல்லும் பெருமை அந்தக் கருடனுக்குக் கிடைத்திருக்கிறது. "கருடாழ்வான்" என்று மதிப்புடன் உச்சரித்து நாம் மரியாதை செலுத்துகிறோம்.

எந்தக் காரியத்தைத் தொடங்கினாலும் முதலில் பிள்ளையார் சுழிபோடுகிறோம். நமக்கு இறைப்பற்று இருப்பதாக வெளியில் சொல்லிக்கொள்ள வெட்கமாயிருந்தால் கூட மறைமுகமாக வழிபடுகிறோம். முறையோடு வழிபட முடியாவிட்டால் முறை தவறியாவது வழிபடுகிறோம். அவரைப் பெரிய தெய்வம் என்று கொண்டாடவேண்டும் – அவரையும் சுமந்து செல்லும் பேராற்றல் இந்த எலிக்கு (மூஞ்சூறுக்கு) இருக்கிறது. ஆனால் மாடு, பறவை பெற்ற மரியாதை இந்த எலிக்குக் கிடைப்பதில்லை. ஐயோ! இதென்ன அநீதி! ஓ எலியாரே! மூஷிகப் பெருமானே! உம்மை மட்டும் ஏனய்யா வீடு தோறும் தடிகொண்டு தாக்குகிறார்கள்? உமக்கு மட்டும் ஏனய்யா இந்தக்கதி! என்று வட மொழிக் கவிஞர் **ஸ்ரீ மகாலிங்க சாஸ்திரி** கேட்டுச் சிரிக்க வைப்பதுடன் சிந்திக்கவும் வைக்கிறார். அந்த சுலோகம் இதோ!

ச்ருங்கீ சேத்ஸ சிவௌபவ
வாஹ்ய வ்ருஷப:
ஸர்வை: புரோ நம்யதே
பக்ஷீ சேத்ஸ முராரிவாஹ
விஹக:
ப்ராப்தஸ் ததா பூஜ்யதாம்
தம்ஷ்ட்ரீ கிம் ந பவஸ்ய
ஹீன விதயா
விக்னேசிதுர் வாஹனம்
கஸ்மான் மூஷக போஸ்த
வைவ பலிதம்
ப்ரத்யாலயம் மர்த்தனம்.

தாய் மொழியிலும் தாய் நாட்டிலும் பக்தி வேண்டுமென்பதுபற்றிமேடையதிரப் பேசுகிறோம். சொந்தத்தாய் - பத்து மாதம் (சில சமயங்களில் ஏழு அல்லது எட்டு மாதம்) சுமந்து பெற்றெடுத்த தாய்க்கு நாம் நன்றி செலுத்துவதில்லை. அவளைப்பாராட்டுவதில்லை. என்றாலும் நம்மை நாம் தாய் நாட்டின் சிறந்த தொண்டர்களாகத்தான் கருதி வருகிறோம். தாயின் சேலைத்தலைப்பைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு வீதியின் இருபுறங்களையும் கவனித்துப் போலீஸ்காரன் யாருமில்லை என்பதை நன்கு தெரிந்துகொண்டு "வந்தே மாதர" கோஷம் போட்டவனும் தன்னைத் தியாகி என்றுதான் சொல்லிக்கொள்ள விரும்புவான். உலகம் இப்படி இருக்கும்போது ஒரு அப்பாவி — அஸாமியக்கவிஞனின் கதாபாத்திரம் - தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிறான்.

"அம்மா! என்னை மன்னிப்
பாய்
அடியேன் பிழை மன்னிப்
பாய்
சும்மா வாங்கித் தின்ன
வன்
சுரண்டி உன்னைப் பிழைத்த
வன்
அம்மா வின்மேல் அன்
பில்லை
ஐயோ! நன்றி கெட்ட
வன் ...."

என்று தன் வெள்ளையுள்ளத்தை விண்டு வைக்கிறான். அவன் போகிற வழியில் நம்மால் போக முடியாது. நாம் நினைப்பதையெல்லாம் வெளியில் சொல்லத் தைரியமில்லையே! போனால் போகிறது.... கடைசிபட்சமாக அஸ்ஸாமியக் கவிஞர் "**நவ காந்த பிருவா**" அவர்களை அவர் கவிதையை அப்படியே கொடுப்பதன் மூலம் கௌரவிப்போமே!

"துமி மோக் க்ஷமா கரோ
ப்ருதிவீ மஇயே க்ருபண
தோமார் ஸகலோ தான்
க்ரஹண் கரியோ
தோமாக ஹேம் ஸஞ்சா
கையே
பால் போஆ நாயி
அகுண்ட ஸ்வீக்ருதி மோர
மஇ அக்ருதக்ஞ"

என்பது புரியவில்லையே என்கிறீர்களா? – எனக்கு மட்டும் புரியுமா என்ன? நான் இந்தி மொழி பெயர்ப்பிலிருந்து தான் பொருள் தெரிந்து கொண்டேன்!

மனோரஞ்சிதம்

# புதுமைப் பித்தன்

"சஞ்சாரன்";

திரும்பத் திரும்ப விரும்பிப் படிக்கக்கூடிய எழுத்தாளர்களுக்குள், புதுமைப்பித்தன் முதன்மை ஸ்தானம் வகிப்பவர். அவரது தமிழ் நடை அத்தனை சுவை நிரம்பியது. வாக்கிய அமைப்பின் திருகல் முருகல், ஜாங்கிரியின் கவர்ச்சியும், அதனுள் ஓடும் ஜீவரஸமும் போன்றவை. பழமையை ஒட்டிய உவமை என்றால் தேனடைக்கு ஒப்பாகச் சொல்ல வேண்டும்.

தேன், சுவை நிரம்பியது; புதுமைப் பித்தன் எழுத்துப் போல! தேனீ பொல்லாதது; சொ. வியின் குணம்போல!! கொட்டாமல் பழகத் தெரியாது. பழகிவிட்டாலோ குழந்தைபோல அத்தனை அன்பும் அரவணைப்பும் கொஞ்சலும் நிறைந்த பேச்சு. பழகியவர் தானே, கண்டால் முகம் நிறையச் சிரிப்பு; வாய் நிறையக் காவிப்பல் என்று விமர்சனத்திற்கு நமது நூலைக் கொடுத்தால், இரவல் அங்கவஸ்திரம் என்றால் மானம் கப்பலேறும்; வெண்பட்டு என்றால் விசிறி மடியாகத் தருவார்.

தமிழ் இலக்கிய விமர்சனம் ஆளுக்காக அல்ல; இலக்கியத்திற்காக என்ற உடும்புப்பிடியாய்ச் சாதித்த முதல்தர விமர்சகர்.

அவரைத் தூக்கி நிறுத்தியவை அவரது சிறுகதைகள்; அவரை ஒதுக்கி வீழ்த்தித் தள்ளியவை அவர் தம் விமர்சனங்கள்; இலக்கிய உலகில் மாரீசத்தனம் செய்தவரை சூர்ப்பனகா பங்கம் செய்வதில் கைதேர்ந்த ஆள்; சுடுசொல்லுக்குப் பிரசித்திபெற்ற புதுமைப் பித்தன் தமிழ்நாட்டு ஷா. அவரிடம் 'பாட்டு' வாங்கிய பிரமுகர்கள் பலர். போலியும், பம்மாத்தும், வெள்ளை வேட்டி சௌடால்தனமும் பிடிக்காதவர்; ஒளிவு மறைவு இன்றித் தம் பல்வரிசை போல வெளிக்காட்டி விடுவார் அவர்.

ஆள், குச்சிபோல; திராணியே இல்லாத உடம்பு; பார்த்தால் புதுமைக்குப் பித்தன் அன்று; பித்தனுக்குள் புதுமை நிரம்பியவர் என்றுதோன்றும் அவுட்டுச் சிரிப்பு; ஆங்கிலமும் தமிழும் கலந்த மணிப்பிரவாள (Sattire) குத்தல் மொழி, கூரிய மதி நுட்பம் நிறைந்தவர்களையும் திணற வைக்கும் நையாண்டிப்பேச்சு. மேடைப் பேச்சிலே பெரிய மௌனி. நண்பர்களுக்குள் சல்லாபம் அளவளாவுதல் வந்தால் அருவியாகக்கொட்டும் பேச்சு. பேச்சருவியில் இடையிடையே சித்தர் முதல் கம்பன் வரை மனப்பாடமான மேற்கோள்கள் ஆங்கிலப் பொன்மொழிகள் ஆங்காங்கே தேக்கி நிறுத்தும் அணைகளாய் அமையும். ஆங்கிலமும் தமிழும் ஊன்றிப்படித்த இரசானுபவப் பித்தன்.

கடவுளோடு மனிதனை விளையாட விட்ட கற்பனாசிரியர்களின் முதுகுக்கு மண்காட்ட, மனிதர்களோடு கடவுளை விளையாட விட்ட கதைப் பிரம்மன். ஆங்காங்கே சமூகத்திற்கு, மதத்திற்கு, மூடச் செயல்களுக்கு சர்க்கஸ் குதிரைக்கு சவுக்கடி கொடுப்பது போல, பிரசாரச்சுவடு தெரியாவண்ணம் சுவைபடக் கதைஎழுதிய திறமைசாலி. எவ்வளவு எழுதவேண்டும், என்னென்ன பிரிவுகள் இலக்கியத்திற்கு எழுதப்படவேண்டும் என்று உணர்ந்த சாமர்த்தியசாலியைவிட எப்படித் தனித்து நிற்கவேண்டும் என்பதை அறிந்த பிரம்ம ராக்ஷஸ் இவர்.

பேச்சிலே பளிச்சிடும் ஹாஸ்யம். கதையிலே மின்னல் புரியும் சிரிப்பு ஸ்வர பேதங்களைப்போல இனிமையானவை. மீண்டும் கேட்கக்கேட்க வேட்கை நிரம்பியவை. அவரது சொல்லாக்கமும், சொல்லின் நாதக் கட்டும், வாக்கிய அமைப்பின் வர்ணஜாலங்களும் கவிதா உலகத்திற்கே இழுத்துச் செல்வன. கற்பனைச் செறிவோடு 'ஆண்மை'யின் வீரத்தையும், பலவீனத்தையும் நிரம்பச் சுட்டிக் காட்டுவார். பெண்ணின் ஆடை அலங்கார அங்க வர்ணனைக்குள் இறங்காத தப்பிப்பிறந்த எழுத்தாளர்; ஆனால், மனஸ் தத்துவத்தின் நாடிப் பரிசோதகர்.

கனவு, ஏக்கம். ஏழ்மை, பூசல் போன்ற பாசி மூடிய பழமையின் கந்தல் அலங்காரங்களை வெறுப்பவர். அவர் விரும்புபவை எல்லா எழுத்தாளர்கள் எழுதிய கதை, நாவல்களைப் படிப்பது; விமர்சனம் செய்வது; மேலும், உயரிய ஆங்கில நூல்கள், குளிர்ந்த தண்ணீர், துளிர் வெற்றிலை, வாசனைப் புகையிலை நண்பர்களிடம் ஓயாத சல்லாபப் பேச்சு.

கலை உலகில் வாசகர்களுக்குப் புரிய வேண்டுமென்பதற்காக, காலைத் தறித்துக் கொள்ளாது, தன் மனத்தின் உயரத்திற்கு வாசகனை வளர்க்க வேண்டுமென்ற இலக்கிய எழுத்தாளர் "கு. ப. ரா. எப்போதும் பெண்மையை" விமர்சிப்பதில் பிரக்ஞை கொண்டிருந்தது போல ஆண்மைக்குப் புதுமைப்பித்தன் வாரிசு. நல்லதோ, பொல்லாததோ, மனுஷத் தன்மைக்கும் நாகரீகத்திற்கும் அப்பாற்பட்டதைச் சொல்லவும் எழுதவும் கூசியவர் கு. ப. ரா. இவருக்கு நேர் எதிராய்த் தோன்றுவதை எழுதவேண்டும் எழுதிவிட வேண்டும் என்ற அவஸ்தைக்கு உள்ளானவர். புதுமைப் பித்தன் கருத்துக்கள் சொல்லிய விதத்தால் காமஎல்லை, ருசிப்பிசகு, தகாத விருப்பம் என்ற லேபிள்களைக் கடந்து, சொல்லத் தெரிந்தவர்கள் சொன்னால் எந்த எழவையும் சொல்லலாம். ரசக்குறைவு கிடையாது. ஆண்-பெண் விவகாரங்கள், பால்கவர்ச்சி, மாமாத்தனம்கூட, எழுத்திலே வெறுப்புத்தராத புதுமைகள் என்று எண்ணவைத்துவிட்டவர். துன்பக்கேணியில் மருதி பலியாகும் படலத்தை.

உதாரணமாக, **'ஸ்டோர் மானேஜர், கண்ணப்ப நாயனார் ரகத்தைச் சேர்ந்த பேர்வழி. தனது இஷ்ட தெய்வத்திற்குத் தான் ருசித்துப் பார்த்துத்தான் சமர்ப்பிப்பார்.**

(9ம் பக்கம் பார்க்க)

தொடர் 22.

# எங்கிருந்தோ வந்தான்

## 26. சொர்க்கம்

—★—

மெய்யை உணர்த்த வந்த மெய்ஞான பண்டிதா! இத்தரையில் வாழவந்த மக்கள், சொர்க்கம், சிவலோகம், வைகுந்தம் என்ற மேலான இடங்கள் உண்டென்றும், அந்த இடத்துக்குப் புண்யாத்மாக்கள் மட்டுமே போய், என்றும் மாறாத இன்பத்தில் இருப்பார்கள் என்றும் கூறி, அந்த இடத்திற்குச் செல்ல, பாராயணமும், நேம நிஷ்டையும் செய்து வருகிறார்கள்.

என்போன்று சதா உழைத்து ஒரு பெரிய குடும்பத்தைக் காக்கக் கிடைத்த நேரம் போதவில்லை என்று புலம்புகிறவர்களுக்கு நேம நிஷ்டை செய்ய நேரம் ஏது?

எங்களுக்கு சொர்க்க வாசம் கிட்டுவதற்கு வழியென்ன ? எங்களால் சொர்க்கத்திற்கு வழி கண்டு போக முடியாது. சொர்க்கம் எங்களுக்கு நெருங்கியதாக ஆவதற்கு வழிகாட்டவேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான் ஒருவன்.

அதற்கு அவன் தந்த பதில் இதுதான்.

செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்
சேர்ந்திடலாமென்றே எண்ணியிருப்பார்
பித்த மனித ரவர் சொல்லும் சாத்திரம்
பேயுரையா மென்றிங் கூதேடா சங்கம்.

இத்தரை மீதினிலே யிந்த நாளினில்
இப்பொழுதே முக்தி சேர்ந்திட நாடிச்
சுத்த அறிவு நிலையிற் களிப்பவர்
தூயவரா மென்றிங் கூதேடா சங்கம்.

பொய்யுறு மாயையைப் பொய்யெனக் கொண்டு
புலன்களை வெட்டிப் புறத்தி லெறிந்தே
ஐயுறலின்றிக் களித்திருப்பா ரவர்
ஆரியரா மென்றிங் கூதேடா சங்கம்.

என்று முழக்கினான் அந்த முற்றும் உணர்ந்த மேலோன்.



**4 லட்சம் நூல் நிலையங்கள்.**

சோவியத் யூனியனில் மொத்தம் 4 லட்சம் நூல் நிலையங்கள் உள்ளன. இவற்றில் சுமார் 150 கோடி புத்தகங்கள் உள்ளன.

இதல்லாமல், கல்வி அறிவைப் பரப்பும் திரைப்பட யூனிட்டுகள் மொத்தம் 63,000 உள்ளன.

**அஜர்பெய்ஜான் பத்திரிகைகள்.**

அஜர்பெய்ஜான் குடியரசில் இன்று மொத்தம் 109 செய்திப் பத்திரிகைகள் உள்ளன. இவற்றில் மொத்தம் 5 லட்சம் பிரதிகள் அச்சிடப்படுகின்றன.

சஞ்சிகைகள் 172 உள்ளன. இவற்றில் மொத்தம் 1,00,000 பிரதிகள் வெளியிடப்படுகின்றன.

இங்கு 10 பிரசுராலயங்கள் உள்ளன. இவை ஆண்டுதோறும் லட்சக்கணக்கான புத்தகங்களை வெளியிடுகின்றன.

**''உலக வரலாறு'' என்ற நூலின் இரண்டாவது பாகம் பிரசுரம்.**

சோவியத் வரலாற்று மேதைகளால் தயாரிக்கப்பட்டுவரும் ''உலக வரலாறு'' என்ற நூலின் இரண்டாவது பாகம் சமீபத்தில் வெளியாகியுள்ளது.

கி. மு. ஆறும் நூற்றாண்டிலிருந்து கி. பி. ஐந்தாண்டு வரையில் உலக மக்களின் வரலாற்றை இப்பகுதியில் காணலாம்.

சோவியத் வரலாற்று ஆசிரியர்கள் இயற்றியுள்ள இந்நூலில், மேற்கத்திய நூல்களைப்போல் கிரேக்க, ரோமானிய கலாச்சாரங்களைப்பற்றி 'மாத்திரம் விவரிக்கப்படவில்லை.

சீன, இந்தியா, இந்தோ-சீன, இந்தோனேஷ்யா ஆகிய கிழக்குலக நாடுகளின் தொன்மை வாய்ந்த கலாச்சாரம்பற்றியும் போதிய விபரங்கள் அளிக்கப்பட்டுள்ளன.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

ஒலி 22] 16-6-57 [வாரம் 28

# நீதி மன்றங்கள்

கிராம வாழ்க்கை கட்டுப்பாடும் அமைதியும் கொண்டதாய் இருந்த காலம் ஒன்று உண்டு. எல்லாவித வழக்குகளும் கிராமத்துப் பெரிய மனிதர்களின் தலையீட்டால் ஆங்காங்கே தீர்ந்து போவதும், அந்தத் தீர்ப்புக்களை மக்கள் தலை வணங்கி ஏற்று நடப்பதும் உண்டு. இத்தகைய ஒரு காலத்தில் வழக்காடுவது ஒரு தொழிலாக இருந்ததில்லை.

ஆங்கில ஆட்சிவந்து நீதி மன்றங்களும், சட்டபுத்தகங்களும் பெருகி, வழக்குகளும் மலிந்து, அவற்றை வாதாடுகின்ற வழக்கறிஞர்கள் பெருவாழ்வு பெற்று, மக்கள் ஓட்டாண்டிகளாகிப்போன காலமெல்லாம் இந்த ஓரிரு நூற்றாண்டுகளாகத்தான்.

பொதுஜன அமைதிக்கு முறையான நீதி மன்றங்களும் பல்வேறு சட்ட திட்டங்களும் நாகரீக உலகில் பெரும் பயன் விளைவித்திருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால் நீதியை நிலை நாட்டிக் கொள்வதில் கால விரயமும் பெரும் பொருட் செலவும் சமூகத்தில் வறுமைக்கு வித்தூன்றியிருக்கின்ற கொடுமை மிகப்பெரிது

'பெரிய பண்ணைகள் — தரும சொத்துக்கள்—ஆகியவை பற்றிய வழக்குகள். ஐம்பது அறுபதாண்டுகளாகத் தொடர்ந்து தலைமுறை தலைமுறையாக இன்னமும் நடைபெற்று வரும் பயங்கர உண்மை கண்முன் இருக்கிறது. வழக்குகளிலேயே, சொத்துக்கள் யாவும் அழிவுற்று வெற்றி கிட்டும்போது, வறுமையைப் பங்கிட்டுக்கொள்கின்ற அவதியே இவ்வழக்குகளிற் கைகண்ட பலன்.

நீதியை விலைகொடுத்துப் பெற்றாலல்லாது வேறு வழியில்லை என்ற எந்த அமைப்பும் சரியான நீதியை வழங்குமென்று சொல்ல முடியாது. பலர் அநீதிக்குத் தலைவணங்கி விடுவது தவிர நீதியைத் தேடிப்பெற ஆற்றல் இல்லாதவர்களாகவும் ஆகிவிடுவார்கள்.

சுதந்திரம் வந்தபின்னர் வழக்குகளை விரைந்து முடிவு கட்டும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்ட போதிலும் வழக்குகள் புதிய புதிய சட்டங்களால் பெருகிப் பற்பல புதிய சிக்கல்களும் முளைத்து வருகின்றன. எனவே மேலும் துரிதமான முடிவுக்கு வகை செய்ய நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டிருப்பதாக வந்திருக்கும் செய்தி ஆறுதல் அளிப்பதாகும். பத்து ஆண்டுகளுக்கு மேலாகவும் சில வழக்குகள் முடிவாகாமல் இருந்து வருவதாகக் கூறப்படுகிறது. மேலே நாம் குறிப்பிட்டது போன்று வழக்காளிகளின் பின்வாரிசுகள் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து வழக்காடுகின்ற கொடுமைக்கு இடம் கொடுப்பதனால் சமூக நல்லுணர்ச்சி சீர்குலைந்துதான் போகும். இப்போதிருக்கும் வழக்குகளை இன்னும் மூன்று ஆண்டுகளுக்குள் முற்றும் தீர்த்துவிட வேண்டுமென்று எல்லா ராஜ்ய முதலமைச்சர்களையும் மத்திய அமைச்சர் கேட்டுக்கொண்டிருக்கிறார். இந்தக் கோரிக்கைகூட அப்படி ஒன்றும் தீவிரமானதென்று கருத முடியாது. ஹைக் கோர்ட்டுக்கோ சுப்ரீம் கோர்ட்டுக்கோ போவதென்றால் பல்லாண்டுகள் ஆகுமென்ற கவலை போய் ஒழியவேண்டும். இதற்கான தீவிர நடவடிக்கைகள் அமுலுக்குவந்து மக்கள் அரசாங்க நீதியில் நன் மதிப்பையும் நம்பிக்கையும் காட்டுகின்ற காலம் வருமா?

# அணுசக்தி

(கே. ஆர் பசுபதி, பொதுக் காரியதரிசி,
சமாதான கவுன்சில், கரூர்.)

அணு குண்டுகளும், ஜல வாயு குண்டுகளும் நவீன உலகை ஆகர்ஷித்துள்ள கவலையூட்டும் விஷயம்!

கடலில் குண்டுகளை வீசிச் சோதனை செய்வதை இப்புவனம்முழுவதும்எதிர்க்கின்றது.

கடல் என்ற சொல்லுக்குக் கடுமையான விஷத்தை உள்ளடக்கியிருப்பதென்று பொருள்.

“வடவை நெடு நாக்கின் கிளைகள் விரிந்தன்ன செந்துகிர் படருந்திரை கடல்” என்பது கல்லாடத்தின் வாக்கு!

வடவா முகாக்னி எனப்படும் வடவைத்தீ கடலையிருப்பிடமாகக் கொண்டதென்பது மூதுரை!

வடவா முகாக்னி, வடவைத்தீ, ஊழித்தீ, பிரளய காலாக்னி என்னும் பதங்கள் ஒரே பொருளைக் குறித்து நிற்கின்றது!

கடலில் வீசப்படும் குண்டுகள் ஆழ்ந்த அதிர்ச்சியையும், சலனத்தையும் உண்டு பண்ணுகிறது. கடையப்படும் கடல் வடவைத்தீயை வீசுகின்றது. நஞ்சைக் கக்குகின்றது.

அணுக்கதிருடன், வடவையனலும், விஷமும் ஆகாச வழியாகவும், அதிரமோதும் அலை வழியாகவும் பரவுகின்றன!

கந்தக மழையாகப் பொழிகின்றது! கடுங் கனலைக் கொட்டுகின்றது! நச்சுப் பொய்கையாக விளைகின்றது! பசுந்தழை வனங்களிலே, மது மலர்ச் சோலைகளிலே படிகின்றது! நோய்கள் ஓடிவந்து தழுவுகின்றன! முகர்ந்தால் மரணம் கொஞ்சுகின்றது! தளர்ச்சி தாலாட்டுகின்றது! இப்படியாகப் பல உட்பாதங்களை வட்ட வான வெளியிலே, விரிந்த பிரபஞ்சத்திலே நடத்தி வைக்கின்றது!

கடலில் அணை கட்டி அதன் வழி லங்கை செல்ல விரும்பிய ராமன் சரணாகதி செய்த போது, சமுத்திரராஜன் செவி சாய்க்கவில்லையாம்! ராமன் கண்களிலே கோபம் கொப்பளித்தது! கோதண்ட மணிகள் ஒலித்தன! கடலை வற்றடித்து, கடல் வாழ் பிராணிகளை மாய்த்து, சேனைகளை நடத்தியே அக்கரை சேர்ப்பதாக முழங்கினான்! நாணேற்றப்பட்ட பிரம்மாஸ்திரத்தின் ஒளியைத்திக்குகள் தாங்க இயலவில்லை! வானிலே கருமேகங்கள் திரண்டன! கடல் வாழ் பிராணிகள், உலகம் யாவும் அஞ்சித் துடித்தன! திகைத்தன! மலையளவு கடலலைகள் பொங்கி உயர்ந்தன! அந்த வேளை, கருணையே வடிவான லக்ஷ்மணன் உலக சமாதானம் கருதி, பிரம்மாஸ்திரத்தைத் தடுத்தான் ராமனிடம் மன்றாடினான்! ராமனும் ஏற்றான்! என ராம கதை கூறும்! கடலில் ஆயுத சோதனை செய்வதால் ஏற்படும் தீய பலன்களைப் பற்றியும், விளையும் விபரீதங்களைப் பற்றியும் விளக்கியும், அத்தகைய சோதனைகள் நடத்தக் கூடாதென்பதும் இதன் கருத்துரையாம்!

லக்ஷ்மண சொரூபங்களாம் சமாதான வாதிகளின் குரலை லக்ஷ்யம் செய்யாமல், பிரிட்டன் தனதுமேலாதிக்க வட்டாரமாகிய பசிபிக்கில் ஜலவாயு குண்டு வீசி சோதனையை நடத்தியது!

நாடெங்கும் கொள்ளை நோய்! பாரெங்கும் பேய்க் காய்ச்சல்? விஞ்ஞானிகள் அபாயக் குரல் எழுப்புகின்றனர்! அறவோர் அஞ்சுகின்றனர்!

கொடு விஷத்தால் பாதிக்கப்பட்ட மீன்களை உண்பது கெடுதி. கடல் வயலில் மீன்களுடைய விளைச்சல் குறையும். மீன்களை முக்கிய உணவாகக் கொண்டுள்ள நெய்தல் நில மக்களை உணவுப் பஞ்சம் அலட்டும்! நத்தையின் சத்து குறையும்! முத்துச் செல்வம் முடைப்படும்! பவளக் கொடிகள் அழியும்! பவளம் கொழிக்காது! சங்குகுளித்தொழிலும், அதில் ஈடுபட்டுள்ள தொழிலாளர் வாழ்வும், வளமும் சுருங்கும்!

ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் உற்பத்தி பாதிக்கும். ஐந்தாண்டு திட்டம் பாதிக்கும்! மக்கட் செல்வம் மங்கும்! பொருட் செல்வம் பொலியாது!

இந்தியா காமன் வெல்திற்குக் கட்டுப்பட்ட நாடென்பதிலும், பிரிட்டனே காமன் வெல்திற்கு அன்று முதல் இன்றுவரை நிரந்தரத் தலைவனாகயினாலும், இந்தியாவை அடக்கி விடலாம் என்ற துணிவினால் பசிபிக்கில் தைரியமாகக் குண்டு வீசியுள்ளது.

இந்தியாவை மிரட்டிக் காமன்வெல்தில் நீடிக்கச் செய்ய, சோஷலிச முகாமில் நெருக்கமாக இணைவதைத் தடுக்க எடுத்த முதல் மிரட்டல் நடவடிக்கையிது!

ஆங்கில—அமெரிக்கர் நடத்தும் இந்த நாடகத்தின் அரசியல் மர்மம் என்ன?

இந்திய சர்க்கார், கேரளத்தில் கம்யூனிஸ்ட் ஆட்சியை இன்னுமும் அனுமதித்துள்ளது அவர்களால் சகிக்க முடியவில்லை.

கேரளத்தில் அணு சோதனைக்கும், உற்பத்திக்கும் தேவையான "தோரியம்" ஏராளமாகப் படிந்துள்ளது!

இதன் உதவியால் அணு சோதனையும், அதில் வெற்றியும் இந்தியா பெற்றுவிடும். கனரகயந்திரத் தொழில்கள் பெருகும். "இந்தியா வளங்கொண்ட நாடாகிவிடும். இதனால், ஆங்கில—அமெரிக்காவின் சந்தையாக இந்தியா இருக்காது.

எல்லாவற்றையும்விட "மிக நுண்மையான காரணம் பாரதம் தனது அரசாங்கக்கொள்கை சோஷலிசமென்று பிரகடனப் படுத்திவிட்டது. அதனால், தன்னை சோஷலிசமுகாமில் தத்துவ ரீதியில் இணைத்துக் கொண்டுவிட்டது.

முதலாளித்வக் கொள்கையை அமெரிக்கா ஆதரிக்கிறது. ஆகவே பாரத சர்க்காரின் போக்கு ஒரு முரணான போக்கு! அமெரிக்காவின் எதிரி முகாமில் நிற்கும் நிலையாகும்!

இதன் விளைவாக, கேரள ஆட்சியைக் கவிழ்க்கப்பல சம்பவங்கள் நடந்தன! தயாரிக்கப் படுகின்றன! இவைகளைத் தேசீய சக்திகள் விழிப்புடன் கவனிக்கின்றன!

நாளை, பாக்—அமெரிக்கா ஆயுத ஒப்பந்த அடிப்படையில், சில அணு ஆயுதங்களை வழங்கி பாக் சர்க்கார் அரபி கடலின் தென் கோடியில், மேற்குக் கடற்கரையில் சோதனைப் பார்க்க வீசினால், கள்ளிக் கோட்டை, துறைமுகவழியாக விஷ ஜுரமும், அனல் அலையும் கேரளத்தைக்கவ்வும் கேரளம் நலிவின் கூடாரமாகும். அப்போது கேரளாவின் ஆரோக்யத்தைப் பாது காக்கும் வேலையும், கவலையும் சூழும்! கேரளாவின் முன்னேற்றம் தடை படும்!

இந்த வாய்ப்பைப் பயன் படுத்தி அமெரிக்க—ஆங்கில அரசுகளின் நிலையண்டி வாழும் கழகங்களும், ஸ்தாபனங்களின் தனி நபர்களும், கேரள மக்களிடம் அவதூறு அஸ்திரங்களையும், சலிப்பு சஸ்திரங்களையும், பொறுமைப் பாணங்களையும், வாய் வாதச் சிலம்பங்களையும் வீசுவார்கள்! அதிருப்தி மண்டலத்தை விரிவு படுத்துவார்கள்! பணம் தாராளமாக புரண்டோடும்! இதனால் கேரள ஆட்சியைக் கவிழ்க்க நிலத்தைப் பக்குவப் படுத்தலாம்!

இந்த வேளையில், பாரதமும், கேரளமும் பாக்கிஸ்தானுடன் மோதும்! விளையும் லாபத்தை அறுவடை செய்ய டாலர் காத்துக் கொண்டு நிற்கின்றது!

இந்த வேலையை "டான்" பத்திரிகை மூலம் ஆரம்பித்து விட்டது அமெரிக்கா!

"இன்று கேரளம் ஆனது போல், நாளை மேற்கு வங்கம் சிகப்பாகலாம். நேரு என்றும் சிரஞ்சீவியாக இருந்து விட முடியாது, அவருக்குப் பின்னே அல்லது அவர் காலத்திலேயோ இந்தியா படிப்படியாக சிவப்பானால் அவரது தேசத்திற்கு என்ன எதிர்காலம் உள்ளது?" என்றும்,

"எப்படியிருந்தாலும் கம்யூனிஸ்ட் அபாயம் இரண்டு தேசங்களுக்கும் பொது. இந்தப் பொதுப் பிரச்னையில் இரு நாடுகளின் நலனைக் கருதி காஷ்மீர் புண் ஆற்றப்பட்டு, உறவு வளர வேண்டும். அப்போதுதான் வளர்ந்து வரும் 'கம்யூனிஸ்ட் அபாயத்தைத் தடுத்து நிறுத்த இரு தேசங்களும் கூட்டு நடவடிக்கை எடுக்க முடியும்.' என்றும் 27-5-57 தேதி "ஜன சக்தி" எடுத்துக் காட்டியுள்ளது.

அமெரிக்க "டான்" இதழ் மூலம் எப்படிக் கவலையுறுகின்றது பாருங்கள்!

கம்யூனிச அபாயத்தை ஒழிக்க புதிய பாஷையில் பேசி, நேசக்கரம் நீட்டும் "டான்" காஷ்மீர் பற்றிக் குறிப்பிடுவானேன்? "காஷ்மீர் புண் ஆற்றப்பட்டு" என்று சொல்லும்போது, அது எப்படியுண்டானது? எப்படி ஆற்றுவது? என்பது சுட்டிக் காட்டப்படவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். ஆனால் காஷ்மீர் பாகிஸ்தானிடம் தந்துவிட வேண்டும் என்ற தணியாத ஆசை பளிச்சிடுகின்றது!

தென்னாட்டுக் காஷ்மீரான கேரளமும், வட நாட்டில் உள்ள காஷ்மீரமும் அமெரிக்காவின் தூரதிருஷ்டிக்கு சிக்கியுள்ளது என்பது தெளிவாகப் புலப்படுகின்றது!

"வருகிற போர் அணுயுத்தம்! ஏ.ஆர்.பி. சாதனங்களாக கட்டிடங்கள் பயன் படாது. எனவே, குகைகளே விமானப் பாதுகாப்பு தளங்களாக அமையும். இவை யூரல்மலைச் சாரல்களிலும், இமயமலைச் சாரல்களிலும் அமைந்துள்ளன.

சிங்கியாங்கும், உலகத்தின் கூரை எனப்படும் திபெத்தும், 1300—மைல் நீளமுள்ள இமயமலையும் நமக்கு அரணாகின்றன.

ஆங்கில, அமெரிக்க அரசுகளுக்கு ஸ்காட்லாந்து மலைப் பகுதிகளும், சான்பிரான்சிஸ்கோ—பகுதிகளிருப்பினும் போதிய வசதிகளுடையன வல்ல. சிரமன்டில் புதிதாகக் குகைகளைக் கட்டினாலும் அணு அதிர்ச்சிதாங்காது உதிர்ந்து விடும்.

**விஞ்ஞான முறைப்படி அணுக்கதிர் பனிக்குகையில் நுழைந்தால் பலனற்றுப் போகும்,**

ஆகவே, காஷ்மீர் சிக்கினால் சீனாவின் திபெத்தையும், இந்தியாவின் இமயத்தையும் கண்காணிக்கலாம். வாய்ப்பு கிடைத்தால் சுருட்டிக்கொள்ளலாம். நாளைய அணுப் போர் காலத்தில் தனது மூல பலத்தை பனிமலையிலே முகாமிடச் செய்யத்திட்டமிட்டுள்ளது, என்ற கருத் தொளியைப் பரப்புகின்றார் தேசியத் திரு. பசும்பொன் முத்துராமலிங்கனார்!

இதை ஒட்டிப் பார்த்தால் "டான்" இதழ் தெரிவித்துள்ள கருத்துக்கள் நமக்கு பல உண்மைகளை உரைக்கின்றதோடு, உள்ள அபாயத்தையும் உணரவைக்கின்றது!

பசும்பொன்னாரின் பாங்குள்ள கருத்தை வளர்க்கும் வகையில் சில அகச்சான்றுகளைக் கூறவிரும்புகிறோம்.

இமயத்தைப் பாடாத புலவனில்லை. "மன்னும் இமயமலை எங்கள் மலையே" என்று சொந்தம் கொண்டாடினான் பாரதி!

இளங்கோ வடிகளாரும், சிலப்பதிகாரக் காவியத்தில், கண்ணகி தெய்வத்துக்குப்படிவம் அமைக்க, பொதியமலைக் கல்லைவிட, இமயக் கல்லே சாலச் சிறந்த தென்கின்றான். அதற்குக் காரணம் புனிதமானது, சிறந்த தென்று நவில்கின்றான்.

உலகத்தில் உயர்ந்த மலையாம் ஆல்ப்ஸ் மலையின் கல்லையும், இமயத்துக் கல்லையும் சோதித்த விஞ்ஞானிகள், இமயக்கல் பல்லாயிரமடங்கு சக்திவாய்ந்த தென்று முடிவு கட்டியுள்ளனர்.

(தொடரும்)

# உன்பதம் சேராயோ?

கா. வேலுச்சாமி

—✱—

வெள்ளிப் பனித்திரை ஓடி மறையவே
வீசுங் கதிரொளி பார்! — எழில்
துள்ளும் இளநகை நங்கையர் தம்முகம்
தூமலர்த் தாமரையோ? (1)

விண்ணி லுலவியே அண்டங்கள் யாவையும்
வேகம் பயின்றுவிட — நீ
மண்ணி லுயிர்க்குலம் மாண்புடன் வாழவோ
மாறு திருப்பதுவும்! (2)

அண்டங்கள் கோளங்கள் யாவும் முடிவினில்
அனலாக மாறிடினும் — உயர்
விண்ணின் பெருஞ்சோதி உன்னிடம் சேர்ந்திட
வேதனை யேதெமக்கு? (3)

மின்னிடு முன்னொளி தன்னி லுயிரினம்
மேதினி வாழுதையா? — அதை
எண்ணிடும் போதினி லீசன் கருணையை
என்னென நான் புகழ்வேன்! (4)

அந்தி பகலென ஆடுமோர் கூத்தினை
அறியத் தரமாமோ? — உந்தன்
சிந்தனைத் தேரினி லேறி யுடன்வரச்
சித்தம் விரும்புதையோ? (5)

எத்தனை கோடிப் பிறவிகள் தன்னிலே
ஏய்த்தெனை விட்டாயே! — உயர்
அத்தனே சோதியே அன்பின் உருவமே
ஆதரித் தாளாயோ? (6)

அன்னை கருப்பையில் என்ன நினைத்தானோ?
அறியாச் சிறுமதியேன்! — இன்று
உன்னை நினைத்தழும் போதிலே வந்தெனை
உன்பதம் சேராயோ? (7)

———

## திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 945/50 E. P. 960/56

திருச்சிராப்பள்ளி ஜில்லா போர்டு By its President
—மனுதார் டிக்ரி பெற்றவர்

லால்குடி தாலுக்கா, விராஹலூர், தின்னக் குளம் கிராமத்திலிருக்கும் சின்னசாமி சோளங்க தேவர் குமாரர்கள் (1) ராஜு அம்பலம் (2) தங்கமயன் அம்பலம் (3) துளசி அம்பலம் (4) கிருஷ்ணசாமி அம்பலம்

—எதிர் மனுதார்கள்
சப்ளிமெண்டல் பிரதிவாதிகள் 2 to 5

இறந்துபோன 1ம் பிரதிவாதி சின்னசாமி சோளங்க தேவருக்கு சொந்தமாய், எதிர் மனுதார்களின் கைவசம் உள்ள மனுவில் கண்டஸ் தாவர சொத்துக்களை ஷை நம்பர் டிக்ரிக்காக ஏலம் போட்டு வசூல் செய்ய மனுதார் மனுகொடுத்து ஏல நோட்டீஸ் உத்தரவாகி ஷை மனு 25-6-57 தேதி பகல் 11 மணிக்கு ஈரங்கி போடப்பட்டிருக்கிறது.

P. சுப்பய்யா
மனுதார் அட்வகேட்

---

## குளித்தலை டி. மு. கோர்ட்

O. S. 443/1956 I. A. 352/57

சுப்பிரமணிய பிள்ளை
—வாதி
பெரியசாமி மூப்பன்
—பிரதிவாதி

ஷை நம்பரில் பைனல் டிக்ரி செய்ய வேணுமாய் வாதி மனுக் கொடுத்து 29-6—57 தேதி நோட்டீசு கெடு ஏற்பட்டிருப்பதால் அன்று பிரதிவாதி ஆஜராகாவிடில் வாதிக்கு பைனல் ஏற்பட்டு விடும்.

ஆர். வி. ரங்கா
வாதி அட்வகேட்

## வரிபூதம்

புதிய வரி விதிப்புக்களின் மூலம் சுமார் எழுபத்தெட்டு கோடி ரூபாய் உபரி வருமானம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அதாவது ஒவ்வொரு பிரஜையும் சுமார் இரண்டு ரூபாய் அரசாங்கத்திற்குத் தரவேண்டியிருக்கும் இத்தகைய மறைமுக வரிகளுக்குப்பதிலாக நபரொன்றுக்கு இரண்டு ரூபாய் தலைவரி வசூலிக்கும் சாத்தியக் கூறுகளை ஆராய்வது நலம் என்று தோன்றுகிறது.

ஏனெனில் புதிய வரி விதிப்பு என்ற நொண்டிச்சாக்கின் காரணமாக வாழ்க்கைக்குத் தேவையான அத்தியாவசியத் தேவைப் பொருள்களின் விலை வாசிகள் விஷம் போல ஏறிவிட்டன. மறுபடியும் சமனத்திற்கு வர ஒரு மாத காலம் பிடிக்கலாம். இதற்கிடையில் மக்கள் வரி விதிப்பைப்போல் குறைந்ததும் மடங்குத் தொகையைப் பிறர் துயரில் உயிர் பிழைக்கும் வியாபாரிகளிடம் கொடுத்து விடுவார்கள்.

பாரத நாட்டில் அறவுணர்ச்சி அறவே அற்றுப் போய் விடவில்லை. வெறும் ஆத்மீக சக்தியை மாத்திரம் துணை கொண்டு நம்மில் ஒருவர் பல லட்சம் ஏக்கர் நிலத்தையும் பணத்தையும் தானமாகப் பெற்றுவருகிறார், சரியான முறையில் மக்களின் தரும உணர்ச்சியைத் தூண்டினால் எழுபத்தெட்டு கோடி ரூபாய் என்பது பெரிய தொகை அல்ல. பொதுமக்களிடம் சென்று நமது திட்டங்களைப்பரப்பும் தொண்டர்கள் ஒவ்வொரு ஊருக்கும் தேவை, நல்ல பிரசாரத்திற்கு மக்கள் நிச்சயம் செவி சாய்ப்பார்கள்,

மக்களின் தரும உணர்ச்சியைத் தழைக்க விடாமல்செய்வதற்கு நிதியமைச்சரின் பிரசங்கம் மாத்திரம் போதுமானது.

—கணபதிராயன்.

# ரோடரி செய்யும் சேவை

திரு. எஸ். ரெங்கராஜன்,
ஜில்லா நீதிபதி செங்கல்பட்டு.

நவீன காலத்திற்கேற்ற வகையில் ரோடரி சங்கம் புரியக்கூடிய புதுமையான பணி ஒன்று உண்டு.

வளர்ச்சியடையாத மக்கட் குழாத்திடையே, சொல்லுக்கும், செயலுக்கும் அதிக பேதம் இல்லாதிருப்பதைக் காண்கிறோம். ஒரு மக்கட் கூட்டம் குறைந்த அளவில் இருக்கும்போது, ஒன்றை உபதேசிப்பதும் மற்றொன்றைச் செயலாற்றுவதுமான மாறுபாடான சந்தர்ப்பங்கள் எழுவதில்லை. தவிரவும் குட்டு வெளிப்பட்டு விடும் என்கிற பயமும் உண்டே! எப்படியும் இத்தகைய ஜன சமூகத்தில் வெளிப்படையாக சொல்லுக்கு மாறாய் ஒருவர் நடக்க முடியாது. ஆனால் கூட்டம் பெருகப் பெருக, வாழ்க்கைப் பிரச்னை குழம்பிப்போகத்தான் ஆத்மார்த்தமாக நம்பாததை ஒருவர் பிரகடனம் செய்யும் நிலை சாத்தியமாகிறது. தன் சமூகத்துக் கேற்றவற்றைத் தியானிப்பதாக நடித்து நேர் மாறாக நடப்பதையே கலையாக ஒருவர் செய்ய முடியும் தான். சமூகத்திற்குப் புறம்பான தன் நடவடிக்கைகளை புத்திசாலித்தனத்தாலும் சாதுரியத்தாலும் மறைத்து விடவும் கூடும்.

சொல்லையும், செயலையும் ஒன்று படுத்தியோ அல்லது இவற்றினிடையே உள்ள வேறு பாட்டைக் குறைத்தோ தான் ஒரு சமுதாயத்தின் ஒழுக்க நிலையை உயர்த்த முடியும். இவ்வகையில் ரோடரி இயக்கம் சாதிப்பதற்கு நிறைய இருக்கிறது. இந்த ரோடரி சங்கம் ஒரு இடத்தின் பலவகை மக்களின் கூட்டு இயக்கம். அந்த இடத்திலுள்ள பலதுறைப் பிரதிநிதிகள் இதில் அங்கம் வகிக்கிறார்கள். ஒவ்வொரு துறையிலும் ஒரு பிரதிநிதி என்ற முறையில் அந்த சமுதாயம் முழுவதும் இதில் அங்கம் வகிக்கிறது என்பது கருத்து. இதில் இருப்போர் ரோடரி கோட்பாடுகளை மேற்கொண்டு ஒழுகும்போது, அதே துறையைச் சார்ந்த ஏனையோரும் பின்பற்றத் தொடங்குகின்றனர். இவ்வாறு சமுதாயம் உயர்வடைகிறது. இவ்வாறின்றி, ரோடரி சங்கத்தினர்களே தங்கள் கொள்கைகளைக் கடைப்பிடிக்காது, சமூக விரோதமான காரியங்களில் ஈடுபடவும் செய்வார்களானால், ரோடரியின் தத்துவமே தோற்றுப்போகும். சொல்லுக்கும் செயலுக்கும் இடையே உள்ளபிளவைக் குறைப்பதற்குப் பதிலாக, இந்த இயக்கத்தையே மாசு படுத்தியவர்களாவார்கள். காலக்கிரமத்தில் சொல்லுவது ஒன்று செய்வது மாறானது என்ற இழிநிலைக்குச் சங்கத்தினர்கள் இறங்கிவிட இந்தஇயக்கமே ஒரு கருவியாகிவிடும். தங்கள் துறையில் தலைவர்கள் என்று கருதப்படுகின்ற ரோடரி சங்கத்தினர்கள் நான்கு நன் மார்க்கங்களைக் கடைபிடித்தும், தங்கள் துறையை முன்னேற்ற வழியில்லை என்று குறை கூறக்கூட இடமிராது. பல்வேறு சமுதாய நலத்துறைகளில் ஈடுபட்டு உழைக்க இச் சங்கங்களால் முடியாவிட்டாலும் அடிக்கடி சந்தித்து ரோடரி லட்சியங்களை நினைவுறுத்திக்கொள்வதின் மூலமும் அந்த லட்சியங்களின்படி ஒழுகுவது என்று உறுதி கொள்வதின் மூலமும் பயனடைய இடமுண்டு,

கரூரில்

---

(4ம் பக்கத் தொடர்ச்சி)

இதை வேறு எவ்விதம் கையாண்டாலும் ரஸக்குறைவு. எந்த வார்த்தை போட்டாலும் விரசம். புதுமைப்பித்தனுக்குள்ள திறமைகள் பலவற்றுக்குள் எதையும் சிருஷ்டிக்கும் ஆற்றல் மட்டுமல்ல. அவரது துணிச்சலான 'அகல்யா' ஒருநாள் 'பாபவிமோசனம்' துன்பக்கேணி முதலான சிருஷ்டிகளை, பலவீன பாத்திரங்களை மறைக்கும்பட்டுச் சல்லாவாக சொற்கோவைகள்மிளிர்கின்றன.

இலக்கியக் கர்த்தா வேறு, தனி மனிதன் வேறு என்ற நற்பண்புகள் நிறைந்த கு. ப. ராவும் நமக்குப் புதிர். இலக்கிய கர்த்தாத்தனம் ஒருவகை தம்பி, தனி மனிதன் போக்கு மற்றொரு வகை அப்பர், மறறக் கலையில், தொழிலில் தலை நிமிர்ந்து நிற்பவரைப்போல எழுத்தாளரான நாமும் செருக்கோடு வாழ முடியும் என்று காட்டிய சொ. வியின் வாழ்க்கையும் நமக்குப் புதிர். கு. ப. ராவின் இலக்கிய போக்கு காவிரியின் அமைதியும் செழுமையும் என்றால் குற்றாலத்து அருவியின் சாகஸமும் ஆரவாரமும் புதுமைப் பித்தன் இலக்கியப் போக்கு.

இளம் எழுத்தாளர்கள் கு. ப. ராவின் கலைவழியே அடியொற்றி நிறையப் பயன் பெறலாம்! புதுமைப் பித்தன் கலைவழியே அடையும் பயனை விட சுகம் மட்டுமே அதிகம்! பிறர் பின் பற்றமுடியாத கல்லுழி மங்கன் புதுமைப்பித்தன் மட்டுமா? 'ரஸமட்டம்' சொ. வி. வேலூர் கந்தசாமிக் கவிராயர் யாரையாவது பின்பற்ற முடிந்ததா?

---

# மாதரசி மீரா!

"பாமா"

மனிதனின் உணர்ச்சி, உலகில் எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்தி விடுகின்றது; ஷாஜஹானின் இதயத் துடிப்பு அவன் தன் மனைவியரசி மீது கொண்ட மாசற்ற காதலின் சின்னமாக — தாஜ்மகலாக உருப்பெறவில்லையா?

இலக்கிய அரங்கில் இவ்வுணர்ச்சி செய்யும் விந்தைகள் அனந்தம். உணர்ச்சியால் உந்தப்படும் கவிஞன் அமர இலக்கியத்தைச் சிருஷ்டிக்கிறான். இந்திய இலக்கிய வரலாற்றின் மீது கவனஞ் செலுத்தும்போது பக்திமான்கள் நிறைந்த அந்தக்காலம் பொற்காலமாகக் கருதப்படுகிறது. பக்திமான்களான ஸுரதாஸர், துளசிதாஸர், கபீர்தாஸர் போன்றவர்களின் காலத்தில் நடைபெற்ற அறிவுப் பிரசாரம் உண்மையிலேயே பாராட்டத்தக்கது. மாதரசி மீராவும் இதே காலத்தைச் சேர்ந்தவள்தான்!

ஸுரதாஸருக்கு அடுத்தபடியாகக் கண்ணன் மீது பக்தி — வேட்கை கொண்ட பக்தசிரோமணி மீராதேவியன்றோ! மீரா கொண்ட கிருஷ்ணன் பக்தி மிகவும் மதுரமானது. மீராவின் காலத்தில் பக்திப் பிரவாகம் ராஜஸ்தானத்தின் வரண்ட வெளிகளையெல்லாம் நனைத்து வளமாக்கிக் கரை புரண்டோடிற்று. அங்கு தடாகத்தில் தாமரைபோல் மாதரசி மீரா மலர்ந்தாள். மீராவின் கீதங்கள் இந்தி இலக்கியத்தின் விலைமதிக்கவொண்ணாத மாணிக்கங்கள். மீரா தான் கண்ணன்மீது கொண்டுள்ள காதலை என்றென்றும் மறையாத இசையோவியமாக்கி விட்டாள். அவள் கொண்ட காதலில் வெறும் துடிப்பல்ல— வேரோடிப் பாய்ந்து விட்ட உறுதி தொனிக்கிறது!

மீராவின் வாழ்க்கைபற்றி வெவ்வேறு வர்ணனைகள் கிடைக்கின்றன. மீரா கி. பி. 1573ல் பிறந்து 1603ல் அமரநிலையெய்தியதாகக் கருதப்படுகிறது. அன்னை, மீராவின் பிள்ளைப் பருவத்திலேயே கண்ணைமூடி விட்டதால் தாத்தாவின் ஆதரவிலேயே அவள் வளர்ந்தாள். தாத்தா சிறந்த விஷ்ணு பக்தர். கேட்கவேண்டுமா? — மீராவின் குழந்தைப் பருவத்திலேயே பக்திக்கு நல்ல விதை ஊன்றப்பட்டுவிட்டது.

ஒரு தடவை யாரோ ஒரு சாது கொடுத்துச் சென்ற கிருஷ்ண விக்ரகத்தின் மீது ஆசை கொண்டு விட்டதாகவும் ஆசையே நாளடைவில் அசைக்க முடியாத காதலாக மாறிவிட்டதாகவும் கூறுவதுண்டு.

மீராவை மேவார் ராணா ஸாங்காவின் புதல்வர் போஜராஜன் முறைப்படி மணந்தார். மீரா கணவன் வீட்டுக்குச் செல்லும் போது மற்ற சீர்வரிசைகளைப் போலவே தன் விளையாட்டுக் கிருஷ்ண விக்ரகத்தையும் எடுத்துச் சென்றாள். கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகளில் கவனஞ் செலுத்தாமல் 'கிரிதர கோபால'னைக் கை தொழுது வந்த அந்தப் புது நாட்டுப் பெண்ணுக்குப் போதிய தண்டனைகள் கிடைத்து வந்தன!

மீராவின் மணவாழ்க்கை கசந்து விட்டது. அவள் எத்தனையோ கொடுமைகளுக்குள்ளானாள். வாழ வேண்டிய மீராவின் விதி சிரித்தது. கணவனும் நிறைபெறாத வாழ்விடையே கண்ணைமூடினார். தந்தை ரத்னசிம்மரும் பாபரோடு போரிட்டு உயிர் துறந்தார். ஒருவேளை இந்தச் சோகக் கதைகளின் விளைவாக மீராவின் மனதில் வைராக்யம் வேரூன்றியதோ என்னவோ! மீரா ஆடம்பர வாழ்வைத் துறந்தாள். இந்த உலகத்தின்மீது பற்றுவைத்தால் அது நம்மைக் கீழே தள்ளிவிடும் என்று உலகப் பற்றை விட்டொழித்தாள். கிரிதரகோபாலனின் திருவடிகளையே சரணமடைந்தாள். மீராவுக்கு தீக்ஷை தந்தவர் குருதேவ்—மகாத்மா—ரைதாஸ் என்கிறார்கள்.

மீரா வெறும் பக்தி மட்டும் செலுத்தவில்லை; சிறந்த கவிதைகளையும் இயற்றினாள். மீராவின் கவிதைகளில் மொழி பேசாது; அவள் இதயமே பேசும். எந்தக் கல்நெஞ்சமும் கரைந்துவிடும்.

உலகில் யாராலும் சுலபமாக விடமுடியாத சுய கௌரவத்தையும், குடும்ப கௌரவத்தையும் மாதரசி மீரா துணிந்து உதறினாள். உலகம் கை கொட்டிச் சிரித்துக் கேலி செய்தது. மைத்துனன் ராணா விஷக்கோப்பையைப் பரிசாக அளித்தான். நாடோடியாக அவள் அலைய நேர்ந்தது. ஆனால் கிரிதரகோபாலனை அவள் விட்டகலவில்லை.

"கூறுவர் யாரோ குடிகேடி
என்று
குமுறுவர் உள்ளம்
பைத்தியம் என்று
..........
..........
மீரா கிரிதர நாம
தடாகத்தில்
முக்குளித்தின்பப் போதை
கொண்டாள்"

— மீரா கண்ணனைத் தன் கணவனாகவே கருதுகிறாள். தன்னை அவன் மனைவியாகவே கருதுகிறாள். இந்தத் தம்பதிகளுக்குள் உயர்வு, தாழ்வு பேதபாவனையேயில்லை. மீரா எனும் ஜீவாத்மா கிருஷ்ண பரமாத்மாவுடன் இரண்டறக் கலந்து மகிழ்ந்தாள். கணவனும் மனைவியும் கொள்ளும் இலட்சியக்காதல் வாழ்வை அவள் கண்டாள்.

"கிரிதரன் வீட்டை நாடி
நான் செல்வேன்
கிரிதரன் எந்தன் உண்மைக்
காதலன்
கண்டதும் காதல் கொண்ட
தும் உண்மை
கண்ணனும் நானும்
காதலர் நெடுநாள்"

—என்று அவள் கண்ணன் மீது கொண்ட மையலில் வசமிழந்து துடிக்கிறாள்.

"கூடிடின் முடிவுறும்
பிரிந்திடின் விரிந்திடும்
நாடிடும் நன்மைக்
காதலின் வழி இது"

என்பதற்கிணங்க மீரா கிரிதரனின் மையலில் உள்ளம் நைந்துருகிப் பாடுகிறாள்.

"கண்ணா! நானொரு காதல்
பைத்தியம்
கண்டவர் யாரெந்தன்
காதல் வேதனை"

என்றவள் புலம்புகிறாள். கண்ணன் மீது காதற் பித்துப் பிடித்தலையும் அவள் உணர்ச்சிச் சிகரத்தில் உயிர் துடிக்க அலறுகிறாள். புண்ணின் வேதனையைக் காயமடைந்தவர்கள் தாமே உணரமுடியும்!

சென்ற இதழ் தொடர்ச்சி.

# ஏழை எளியவர்களுக்கான ஜனதா பாலிஸி.

பாலிஸியைத் பொறுத்த எல்லா வேலைகளும் பாலிஸிதாரர் வீட்டிலேயே நடக்கும். பாலிஸிதாரர் எப்பொழுதும், எதற்கும், எந்த ஆபீசிற்கும் போகவேண்டியதில்லை. அதிகாரம் வழங்கப்பட்ட ஏஜண்டுகள் எல்லா வேலையையும் பாலிஸிதாரர்கள் வீட்டிற்கு வந்து செய்வார்கள். ஆகவே, அவர்கள் முழு நேர ஏஜண்டுகளாகவும், முன் பணம் கட்டியவர்களாகவும் இருப்பரர்கள்.

18-வயதும், அதற்கு மேற்பட்டும், 45-வயதிற்கு மேற்படாதவரும் இத்திட்டத்தின் கீழ் பாலிஸி எடுத்துக்கொள்ளலாம்.

35-ம், அதற்குக் கீழ்ப்பட்ட வயதுள்ளவர்களுக்கும் வைத்தியப் பரீக்ஷை இல்லாமல் பாலிஸி வழங்கப்படும். 35 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு ஒரு சாதாரண வைத்தியப் பரீக்ஷை உண்டு.

இப்பொழுது என்டோமெண்ட் திட்டத்தின்கீழ் 10, 15. 20, 25 வருஷங்களுக்கான பாலிஸிகள் வழங்கப்படும். 60 வயதிற்கு மேற்படாத எந்த வயதுக்கும் பாலிஸி எடுத்துக்கொள்ளலாம்.

35-ம், அதற்குக் கீழ்ப்பட்ட வயதுள்ளவர்களுக்கும் வைத்தியப் பரீக்ஷை இல்லையென்றாலும், பாலிஸி ஆரம்பத்திலிருந்தே பாலிஸித் தொகை முழுவதற்கும் பொறுப்பு உண்டு, பாலிஸி எடுத்தபிறகு மரணம் உடனே சம்பவித்தாலும். பாலிஸித் தொகை முழுவதும் கொடுக்கப்படும்.

பாலிஸி விதிகள் மிகவும் தாராளமானவை. பிரீமியம் கட்ட அதிகப்படியான அனுமதிக்கப்பட்ட காலம் உண்டு. பொறுப்பிழந்த பாலிஸிகள் மூன்று வருஷத்திற்குள் கட்டவேண்டிய பிரீமியத்துடன் 6 பர்ஸண்டு வட்டியும் சேர்த்துக் கட்டிப் புதுப்பித்துக்கொள்ளலாம். பாலிஸியைப் புதுப்பித்துக்கொள்ள குறிப்பிட்ட சில விசேஷ அம்சங்களைத் தவிர, பாலிஸிதாரர்கள் வைத்திய ரிப்போர்ட் ஒன்றும் கொடுக்க வேண்டியதில்லை, குறைந்த பக்ஷம் 2 வருஷங்களுக்குப் பிரீமியம் கட்டப்பட்டிருந்தால் "நான் பர்பீச்சர்" சௌகரியம் கிடைக்கும். பாலிஸிகள் தாமாகவே பெய்டப்பாக செய்யப்படும். இரண்டு வருஷங்களுக்குப் பிறகு பாலிஸிதாரர் பிரீமியம் கட்டவில்லையென்றால், அவருக்கு கட்டிய தொகைக்கு ஒருவித நஷ்டமும் ஏற்படாது.

உத்திரவாதமுள்ள சரண்டர் மதிப்புகள் உண்டு. பிரயாணம்; வாசம், தொழில் இவைகளால் ஒருவிதக் கட்டுப்பாடுகளும் கிடையாது.

பாலிஸியின் தொகையை சீக்கிரமாகப் பெறுவதற்காக பாலிஸிதாரர் யாராவது ஒருவரை நியமிக்கலாம். அவர் வயது வந்தவராக இல்லாத போனாலும், அவருக்கு ஒரு கார்டியனையும் நியமிக்கலாம். இவை யாவும் பாலிஸியில் குறிக்கப்பட்டிருக்கும்.

பெண்களும் அநேகமாக ஆண்களைப் போலவே ஜனதா பாலிஸி எடுத்துக்கொள்ளலாம்.

இந்தத்திட்டம் முதலில் ஒரு மாதிரித் திட்டமாகக் குறிப்பிட்ட சில தொழிற்சாலையுள்ள இடங்களிலும், கிராமப் பகுதிகளிலும் கொண்டுவரப்படும். தெற்குப் பிராந்தியத்தைப் பொறுத்தவரையில், தொழிற்சாலைகள் உள்ள சென்னை, கோயமுத்தூர், ஹைதராபாத், நகரங்களின் பிரிவுகளும். கீழ் கோதாவரி, தஞ்சை ஜில்லாக்களின் கிராமங்களும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. அனுபவம் பெற்றபிறகு இத்திட்டம் மற்றப் பகுதிகளுக்கு விஸ்தரிக்கப்படும்.

1951 ஜனத்தொகை எண்ணிக்கைப்படி மொத்த ஜனத்தொகையான முப்பத்தாறு கோடியில், 10½ கோடி தாமே சம்பாதித்து வாழ்பவர்கள். இவர்களில் 7½ கோடி பயிர்த் தொழில் செய்பவர்கள், மேலும் 4 கோடி பேர் வரும்படி உள்ள பிறரை நம்பியுள்ளவர்கள். இதுவரையிலும் ஜனத்தொகையில் ½ கோடி தான் இன்ஷ்யூர் செய்து இருக்கிறார்கள். இந்தஎண்ணிக்கைஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாதுகாப்பு பெறவேண்டியவர்களின் எண்ணிக்கைக்கு மிகவும் குறைவு; ஆகவே ஜனதா பாலிஸியைக் கொண்டு இன்ஷ்யூரன்ஸ் தொழிலை மிகவும் விஸ்தரித்து, அதனால் அநேக காரணங்களால் முன்னால் மிகத் தேவையான இன்ஸ்யூரன்ஸின் பாதுகாப்பைப் பெற முடியாதவர்களுக்கு பாலிஸிகள் வழங்கலாமென்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷனின் மற்ற எல்லா பாலிஸிகளைப்போலவே ஜனதா பாலிஸி. இந்திய அரசாங்கத்தின் உத்திரவாதமுள்ளது.

பாலிஸிகள் ஆங்கிலத்தில் இருந்தாலும் இப்புதுத் திட்டத்தின் மற்ற எல்லா விவரங்களும பிராந்திய அல்லது மாகாண மொழிகளில் இருக்கும், ஆங்கிலப் பாலிஸிகளோடு அவரவர்கள் மாகாண மொழியிலுள்ள பாலிஸி நகல்கள் பாலிஸிதாரர்களுக்கு கொடுக்கப்படும். இதனால் பாலிஸியின் விவரங்களை அவர்கள் சுலபமாக அறிந்துகொள்ளலாம்.

முடிந்த வரையில் இத்திட்டத்தை விஸ்தரிக்கும் நோக்கத்துடன் நாடு முழுவதும் போதுமான அளவில் விளம்பரங்கள் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

10 லட்சத்துக்கு மேற்பட்ட படங்களுடன் கூடிய விளம்பரங்கள் ஆங்கிலத்திலும். மற்ற 8 மாகாண மொழிகளிலும் ஜனதா பாலிஸியைப் பற்றிய விளக்கத்துடன் அச்சடிக்கப்பட்டு நாடு முழுவதும் வினியோகம் செய்யப்பட்டிருக்கின்றன.

இத்திட்டத்தைவிளம்பரப்படுத்ததொழிற்சாலைகள். கிராம அபிவிருத்தி சங்கங்கள், பஞ்சாயத்துகள் போன்ற தெரிந்தெடுக்கப்பட்ட இடங்களில் 50000-க்கு மேற்பட்ட மூவர்ண அறிக்கைகள் ஒட்டப்படும்.

பல மாகாண மொழிகளில் ஜனதா பாலிஸியின் நன்மைகளை எடுத்துக் காட்டும் படக்காட்சி நாடுமுழுவதும் அனேக சினிமா தியேட்டர்களில் காட்டப்படும்.

இந்தியாவில் முன்னால் இருந்த ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் ஏன் இந்த உபயோகமான திட்டத்தைக் கொண்டு வரவில்லையென்ற நியாயமான கேள்வி கேட்கப்படும். இதற்குப் பதில் சுலபமானது. இத்திட்டத்திற்கு வேண்டிய அமைப்புகள் அந்தக் கம்பெனிகளிடமில்லை. மேலும், போட்டி நிலைமையில் இந்தத் திட்டம் லாபகரமாயிருக்குமென்ற எண்ணம் அவர்களுக்கில்லை. ஆனால், தேசிய மயமாக்கியதன் விளைவாக, இன்ஷ்யூரன்ஸின் முழுப் போக்கும் மாறிவிட்டது. இன்ஷ்யூரன்ஸ் தொழிலின் பூரண, பிரத்தியேகமான உரிமை கார்ப்பரேஷனுக்கு இருக்கிறது. சமூகத்திற்குத் தேவையான எல்லாவிதமான ஆயுள் இன்ஷ்யூரன்ஸையும் கொடுக்கும் பொறுப்புஅதன்பாலுள்ளது. அபிவிருத்தி இல்லாத பகுதிகளுக்கும் அது தன்வேலைகளை விஸ்தரித்து, செலவை ஈடுபடுத்திக்கொள்ளலாம். லாப நோக்கம் போம்! சேவைக் கொள்கை இடம் பெற்றிருக்கிறது. இந்தப் பொதுஜன சேவையைக் கொள்கையாகக் கொண்டு, செலவைப் பொருட்படுத்தாமல், கார்ப்பரேஷன் ஜனதா பாலிஸியின் மூலம் ஆயுள் இன்ஷ்யூரன்ஸின் நன்மைகளை எளிய நிலையிலுள்ளவர்களுக்கு வழங்குகிறது. இது தேசிய மயமாக்கப்பட்ட இன்ஷ்யூரன்ஸ் தொழிலின் முதலாவது பெரும் நன்மை!

ஜனதா பாலிஸி எல்லாத் தொழிலாளர்கள் தங்களுக்கும். தங்கள் குடும்பத்தாருக்கும், ஆயுள் இன்ஷ்யூரன்ஸின் பெரும நன்மைகளை அடைய ஒரு வாய்ப்பு அளித்திருக்கிறது. இந்த நன்மைகள், இவ்வளவு நல்ல முறையில் முன்பு, எப்பொழுதும் வழங்கப்பட்டதில்லை.

மேலும் இச்சேமிப்புகளின் மொத்தத் தொகை சமூகத்தின் வாழ்க்கை நிலையை உயர்த்த எடுத்துக்கொள்ளப்பட்ட பல அபிவிருத்தித் திட்டங்களின் செலவிற்காக நாட்டிற்கு உதவும். இத்திட்டம் அளிக்கும் நன்மைகளை பொது ஜனங்கள் கவனித்து, அதன் அனுகூலங்களைப் பெறுவார்களென நம்புகிறோம்.

# கோர்ட் விளம்பரங்கள்

## திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 2917 of 1956

லா. தா. திருப்பங்கலி ஸ்ரீ நீலிவனேசுரஸ்வாமி தேவஸ்தானம் By its எக்ஸிகூடிவ் ஆபீஸர்—வாதி

செல்லமுத்து முத்துருஜா —பிரதிவாதி

ஷை நீய்பரில் குத்தகைபடி துகை ரூ 297-0—0க்குதாவா செய்து 18-6-57ல் ஈரங்கி போட்டிருக்கிறது அன்று ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளவும்.

S. Ratnam
Advocate

## அரியலூர் டி. மு. கோர்ட்

S. C. 1155/56

இடும்பாயிர முதலியார் —வாதி

தர்மலிங்க படையாச்சி —பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி 9-12—46ல் ரூ. 100-0-0க்கு எழுதி கொடுத்த புரோநோட்டுபடி வரவுகள்வந்தது போக பாக்கி துகை ரூ 149—12—0 கிடைக்கவும் தாவா போட்டு ஈரங்கி 15—7—57ல் வைத்திருப்பதால், பிரதிவாதிக்கு கக்ஷி இருந்தால் அன்று ஆஜராகி தெரிவித்து கொள்ளலாம்.

T. S. வெங்கட்டராமன்
வாதி அட்வகேட்

## திருச்சி டி. மு. கோர்ட்

S. C. 2576/56

Satyanarayana Jewellary Mart by its partner Ramanathagupta—வாதி

K. Venkatachalam Chettiar sharaff Sevapettai Selam District—பிரதிவாதி

ஷைநெ.வாதியால்பிரதிவாதி பேரில் கணக்குப்படி ரூ 85—11-0க்கு தாவா செய்து 18—6—57தேதி விசாரணைக்கு போடப்பட்டிருக்கிற விபரம் இதனுல் தங்களுக்கு தெரிவிக்கப் பட்டிருக்கிறது அறியவும்.

R. Gopalarathnam
Advocate

## திருச்சி ஜில்லா கோர்ட்

O. P. நெம் 52/1957

மைனர் எஸ். எஸ். ஜானகி —மனுதார்

எஸ். அழகு சிங்கமய்யங்கார்—அடுத்தஸ்நேகிதர்

ஷை மனுதார் இறந்த எஸ் எஸ். ஸ்ரீநிவாஸய்யங்காருடையசொத்துக்களுக்குவார்சு சர்டிபிகேட் மனு செய்திருப்பதில், ஆக்ஷேபமிருந்தால் 19—6—57 காலை 10-30 மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது

கே. சினிவாசராகவய்யங்கார்
மனுதாரின் அட்வகேட்

## துறையூர் டி. மு. கோர்ட்

O. S. No 63/57

செல்லாயம்மாள் —வாதி

நாச்சி என்கிற நல்ல செல்லி முத்து ருசா —பிரதிவாதி

ஷை நம்பரில் சுவாதீனத்துக்கும் மத்திய கால வரும்படிக்கும் தாவா செய்து 21-6-57 தேதி ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது என்பதை அறியவும்

S. லெட்சுமணய்யர்
அட்வகேட்

## துறையூர் டி. மு. கோர்ட்

O. P. 25/57

காமாக்ஷியம்மாள் வகையரு —மனுதார்கள்

செல்லம்மாள் வகைரு. —எதிர்மனுதார்கள்

ஷை நம்பரில் இறந்துபோன நடராஜ பிள்ளைக்குச் சேரவேண்டிய மனுவில் கண்ட துகையை வசூலிக்க மனுதார்களுக்கு பாத்திய சர்டிபிகேட் கிடைக்கவேணுமாய் மனு கொடுத்து 5—7—57தேதி நோட்டீஸ் கெடு போடப்பட்டிருக்கிறது. அதை பொறுத்து ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை தேதியில் தெரிவித்துக்கொள்ளவும்

(Sd) V. K. Narayana Iyengar
Vakil

## குளித்தலை டி. மு. கோர்ட்

S. C. 93/57

சொக்கலிங்கம் செட்டியார் —வாதி

குப்புசாமி செட்டி 2 —பிரதிவாதிகள்

வாதிக்கு 3ம் பிரதிவாதியும் மைத்தொரு முத்துசாமி செட்டியார் காவேரி அம்மாள் இவர்கள் எழுதிகொடுத்திருக்கும் புரோ நோட்டுப்படி ரூ 118-8-0 துகை கிடைக்க செய்திருக்கும் தாவா 21—6—57 ம் தேதி வாய்தா போடப்பட்டிருக்கிறது.

(ஒம்) எஸ். அண்ணுத்துரை
அய்யங்கார் வாதி வக்கில்

## மாயவரம் டி. மு. கோர்ட்

S. C. No '193/57

A. ரெத்தினம் செட்டியார் Sons Firm—வாதி

வில்லிய நல்லூர் S. சூர்யநாருயண அய்யர்—பிரதிவாதி

ஷை பிரதிவாதிக்கு இதனுல் அறிவிப்பது நகைக்கிரயம் கிடைக்க வாதியால் உங்களுடைய பேரில் துடரப்பட்டிருக்கும்தாவா 29-6—57தேதி ஈரங்கி போடப்பட்டிருக்கிறதுஷை தாவா சம்மந்தமாக உங்களுக்கு ஆக்ஷேபனையிருந்தால் ஷை தேதியில் ஷை கோர்ட்டில் பகல் 10 மணிக்கு ஆஜருகி தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவரினுல் Expartயாக தீர்ப்பாகிவிடும் என்பதை அரியவும்.

M Venkatachalam Pillai
Advocate

## குளித்தலை டி. மு. கோர்ட்

S. C 1064/56

ரெங்கன் செட்டியார் வகையரு—வாதி

அக்கயம் பட்டி 1. பொன்னுத் தாய் 2.சின்னத்தாய் 3. தங்கம் 4. கேசி —3to6 பிரதிவாதிகள்

வாதி பிரதிவாதிகள் வகையரு பேரில் புரோநோட்டுப்படி ரூ 180—0—0 கிடைக்க தாவாசெய்து ஷை தாவா 4—7—57 தேதி விசாரணை வைக்கப்பட்டிருக்கிறது அறியவும்.

K. திருவேங்கடாச்சாரியார்
வாதிகள் வக்கீல்



(2ம் பக்கத் தொடர்ச்சி)

மனமிருந்தால்தான்'' என்றபடி மேஜைமீது வைத்தான்.

ரோஜாவைப்பார்த்த தாரா ''முதல் பூ என்கிறீர்களே! வருடங்கள் ஓடியும்கூட இதுவரை அச்செடி முதல் பூ பூக்காமலே இருந்ததா? அதுதான் புரியவில்லை'' என்ருள். அவன் குரலில் எவ்வித சலனமும் இல்லை.

சந்தேகமா தாரா! என்இதயத்தில் உனக்கு எப்படி முதல் இடமோ அப்படியே இதுவும் முதல் ரோஜாதான். முதல் உன்னுல் வளர்க்கப்பட்ட ரோஜாச்செடியின் பதியன்களில் பல தடவை தலைமுறையாக வைக்கப்பட்ட ஓர் செடியின் முதல் பூ இது. முதல் பூ உனக்குத் தரப்படாததால் நீ இல்லாததால் மலர்கள் செடியிலேயே பூத்து உதிரவிட்டேன். பிறகு அச்செடியிலிருந்து பதியன் எடுத்து மற்றெரு செடி உண்டாக்கினேன் இப்படியே எத்தனையோ.... இன்று கொண்டுவந்த இந்த ரோஜா, கடைசியாக நான் வைத்ததன் முதல் பூ தான். ''உன் விருப்பத்தை இன்ருவது நிறைவேற்ற முடிந்ததே' என்று நீண்டதொரு மூச்சுடன் கூறினுன் ராஜா.

''நான் பாக்யசாலி'' என்ற அவள் அன்புத்தவழப்பார்த்தபடி மேஜைமீது இருந்த பூவை எடுத்து ராஜாவின் கரத்தில் கொடுத்தாள்.

அவள் குறிப்பை உணர்ந்த ராஜா மகிழ்ச்சியுடன் பூவை தாராவின் தலையில் அணிவித்துவிட்டு ''நீ மட்டும் பாக்யசாலியல்ல தாரா. நானும் பாக்யசாலி தான்'' என்று கூறியபடி தாராவின் கரத்தை தன் கரத்துடன் இணைத்துக் கொண்டான்.

Edited and Published by Thiruloka Sitharam for theShivaji Private Ltd and Printed by A. V. R. Krishnasami at Kannan Press,